டாயிற்று. எல்லாவிதத்திலும் பசுக்களை ரக்ஷிப்பதாலும் அந்தப் பசுக்களுடன் ரமிப்பதாலும் அந்தப் பசுக்களுக்கு அதிபதியாயிருப்பதாலும் பசுபதியென்று சொல்லப்படுகிறார். இவருடைய திவ்யலிங்கமானது பிரம்மசர்யத்தினால் நிலைபெற்றிருத்தலாலும் இவர் உலகங்களைப் பெரியவடிவமுள்ளவையாக்ச் செய்தலாலும் மஹேஸ்வரரென்று எண்ணப்பட்டிருக்கிறார். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்திரீகளும் இவருடைய லிங்கத்தை அர்ச்சிக்கின்றார்கள். அந்த லிங்கம் மேலான இடத்தில் நிலைபெற்றிருக்கிறது. அந்த லிங்கமானது பூஜிக்கப்படும்பொழுது அந்த மகேஸ்வரர் ஸந்தோஷமடைகிறார். மேலும், சங்கரர் ஸௌக்யராகவும் பிரீதராகவும் அதிக மகிழ்ச்சியுள்ளவராகவும் ஆகிறார். இறந்தகாலத்திலும் வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் (பிரவாகரூபமாக) நிலைபெற்றிருக்கின்ற ஸ்தாவர ஜங்கமாத்மகமான அவருடைய ரூபமானது பலவாறாக இருக்கின்றமையால் அந்த மகேஸ்வரர் பஹுரூபர் என்று சொல்லப்படுகிறார். அந்த ஈஸ்வரர் ஒரு கண்ணுடையவராகவும் நாற்புறத்திலும் கண்களையுடையவராகவும் மிகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். அவர் க்ரோதத்தினாலே உலகங்களில் அநுபிரவேசம்செய்ததால் ஸர்வரென்றும் எண்ணப்படுகிறார். அவருடைய ரூபமானது தூமவர்ணமாக இருத்தலால் தூர்ஜடியென்றும் சொல்லப்படுகிறார். விஸ்வேதேவர்கள் அவரிடத்தில் ஸான்னித்யம்செய்தலால் விஸ்வரூபரென்றும் எண்ணப்படுகிறார். லோகநாதரான ஈஸ்வரர் ஆகாசம், ஜலம், பூமி இம்மூன்றுதேவிகளையும் அடைதலால் திரியம்பகரென்று சொல்லப்படுகிறார். மனிதர்களுக்கு மங்களத்தை விரும்பிக்கொண்டு ஸாவகாரியங்களிலும ஸர்வார்த்தங்களையும் நித்யம் விருத்திசெய்வதனால் இவர் சிவனென்று எண்ணப்படுகிறார். ஆயிரங்கண்களையுடையவராகவும் பதினாயிரங் கண்களையுடையவராகவும் நாற்புறத்திலும் கண்களையுடையவராகவுமிருந்துகொண்டு பெரிதான உலகமனைத்தையும் ரக்ஷித்தலால் மகாதேவரென்று எண்ணப்படுகிறார். பூர்வம் மகத்தத்துவமாக இருப்பதாலும் பிராணன்களுடைய உற்பத்திஸ்தானத்தில் நிலைபெற்றிருப்பதனாலும் நித்யம் ஸ்திரமான லிங்கத்துடனிருப்பதனாலும் ஸ்தாணுவென்று சொல்லப்படுகிறார். உலகத்தில் சூரிய சந்திரர்களுடைய பிரகாசிக்கின்ற காந்திகள் கேசம் என்று பெயருடையவை. அவைகள் முக்கண்ணரிடத்தில் நிலைபெற்றிருப்பதால் அவர் வ்யோமகேசர் என்று சொல்லப்படுகிறார். இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் முக்காலங்களினுமுள்ள உலகமனைத்தும் மிச்சமில்லாமல் பவரென்று பெயர்கொண்ட

பரமேஸ்வரரிடத்தில் நிலைபெற்றிருப்பதால பூதபவ்ய பவோத்பவர் என்று சொல்லப்படுகிறார். கபியென்பதற்கு சிரேஷ்டம் என்பது பொருள்; விருஷம் என்பது தர்மம்; ஆதலால், பகவானை தேவ தேவர் விருஷாகபியென்று சொல்லப்படுகிறார். பிரம்மா, இந்திரன், வருணன், யமன், குபேரன் இவர்களைத் தண்டித்து ஸம்ஹரித்த னால் ஹரர் என்று சொல்லப்படுகிறார். தேவரான மகேஸ்வரர் பலாத்காரமாக இரண்டு கண்களும் மூடப்பட்டதனாலே நெற்றி யில் ஒருகண்ணை உண்டுபண்ணிக்கொண்டார்; ஆதலால், முக்கண் ணர் என்று சொல்லப்படுகிறார். இவ்வுலகில் பிராணிகளுடைய சரீரங்களில் வெவ்வேறுவிதமான பத்துருபங்களோடிருந்துகொண்டு ஸமமாயிருப்பவரும் புண்யபாபமுதலியவற்றால் வெவ்வேறு விதமா யிருக்கும் பிராணிகளிடத்தில் பிராணன் அபானனென்னும் வாயுரூப மாயிருப்பவரும் இவரே. எந்தமனிதன் மகாத்மாவான ஈஸ்வரருடைய சரீரத்தையும் லிங்கத்தையும் நித்யம் பூஜிக்கிறானோ [illegible] லிங்கபூஜகனான அவன் பெரிதான ஐஸ்வரியத்தை அடைகிறான். ஈஸ்வரருடைய மங் களரூபமான சரீரமானது இரண்டுதொடைகள்வரையில் அக்னிமய மானது; பாதி சந்திரமயமானது. இவ்வாறு அவர் திருமேனியில் பாதி அக்னிரூபமென்றும் (மற்றொரு) பாதி சந்திரரூபமென்றும் சொல்லப்படுகின்றன. அந்தப் பரமேஸ்வரருடைய மங்களகரமானசரீ ரமானது மற்றத் தேவர்களுடைய சரீரத்தைக்காட்டிலும் தேஜோமய மானது; பெரியது; காந்தியுள்ளது. மனிதர்களிடத்தில் பிரகாசமான இவருடைய கோரமான சரீரமானது அக்னியென்று சொல்லப்படு கிறது. இந்த ஈஸ்வரர் தமது மங்களகரமான சரீரத்தினால் பிரம்மசர் யத்தை அனுஷ்டிக்கின்றார். ஈஸ்வரர் தம்முடைய மிக்க கோரமான மூர்த்தியினால் எல்லாவற்றையும் புஜிக்கிறார். எல்லாவற்றையுங் கொ ளுத்துவதனாலும், தீக்ஷ்ணராகவும் உக்கிரஸ்வரூபியாகவும் பிரதாப முடையவராகவும் விளங்குவதனாலும், மேலும் மாம்ஸங்களையும் ரத்தங் களையும் மஜ்ஜையையும் உண்பதனாலும், ருத்ரரென்று சொல்லப்படுகிறார். பார்த்த! உனக்கு எதிரிலிருக்கின்ற இவர் தேவர்; மகாதேவர். யுத்தத் தில் சத்துருக்களைக் கொல்லுகின்ற பினாகபாணியானவர் உன்னால் காணப்பட்டார். தோஷமற்றவனே! ஸிந்துராஜனான ஜயத்ரதனுடைய வதத்தின்பொருட்டு உன்னால் பிரதிஜ்ஞைசெய்யப்பட்டிருந்தபொழுது கிருஷ்ணனால் ஸ்வப்னத்தில் எவர் சிறந்த மலையுச்சியில் காண்பிக்கப் பட்டாரோ, எவரால் உனக்கு அஸ்திரங்கள் கொடுக்கப்பட்டனவோ, எவருடைய அஸ்திரங்களாலே உன்னால் அஸுரர்கள் கொல்லப்பட்

டாரவளோ அப்படிப்பட்ட ஷாட்குண்ய பரிபூர்ணரான மகாதேவர் யுத்தத்தில் உன்னுடைய முன்னிலையில் செல்லுகின்றார். பார்த்த! செல்வத்தைப்பெருக்குவதும் புகழை உண்டுபண்ணுகிறதும் ஆயுளை விருத்திபண்ணுகின்றதும் பரிசுத்தமானதும் வேதங்களோடு ஒப்பிடப்பட்டதுமான தேவதேவரான ஈஸ்வரருடைய சதருத்ரியமானது உனக்கு விரித்துரைக்கப்பட்டது. இந்தஸ்தோத்திரமானது விரும்பினவற்றையெல்லாம் அளிப்பது; பரிசுத்தமானது; எல்லாப்பாவத்தையும் அழிக்குந்திறமையுள்ளது; எல்லாப்பாவத்தையும் தணிக்குந்தன்மையுள்ளது. எல்லாவித துக்கங்களையும் பயத்தையும் போக்கக்கூடியது. எந்தமனிதன் [1] நான்குவிதமான இந்தஸ்தோத்திரத்தை எப்பொழுதும் கேட்கிறானோ அந்தமனிதன் எல்லாச்சத்துருக்களையுஞ் ஜயித்து ருத்ரலோகத்தில் கொண்டாடப்படுகிறான். மகாத்மாவான ஈஸ்வரருடைய இந்தச் சரித்திரமானது எப்பொழுதும் யுத்தத்திற்கு ஸாதகமென்று எண்ணப்பட்டிருக்கிறது. சதருத்ரியமந்திரத்தை எந்தப்பக்தன் எப்பொழுதும் ஊக்கத்தோடு படிக்கிறானோ, எவன் கேட்கிறானோ மேலும் மனிதர்களுள் எவன் மகாதேவரான ஈசுவரரை எப்பொழுதும் பக்தியுடன் பூஜிக்கின்றானோ அந்தமனிதன் பிரஸன்னரான த்ரியம்பரிடத்தினின்று வேண்டிய இஷ்டங்களை அடைகிறான். கௌந்தேய! போ; யுத்தம்செய். எவனுக்கு மந்திரியாகவும் ரக்ஷகராகவும் ஜநார்த்தனர் பக்கத்திலிருக்கின்றாரோ அப்படிப்பட்ட உனக்குத் தோல்விகிடையாது' என்று சொன்னார். பரதசிரேஷ்டரே! சத்துருக்களைச் சிக்ஷிப்பவரே! பாராசரபுத்திரரான வியாஸர் யுத்தத்தில் அப்பொழுது அர்ஜுனனைப்பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு வந்த வழியே சென்றார்." என்று ஸூதகுலத்திற்பிறந்தவனான ஸஞ்சயன் அரசனுக்கு இவை அனைத்தையும் உரைத்துவிட்டுக் கர்ணனுடைய வதத்தைப் பார்ப்பதற்காகச் சேனைதங்கியிருக்கும் இடத்தைக் குறித்தே சென்றான்.

ஜனமேஜயமகாராஜரே! மஹாபலவானான பிராம்மணர் ஐந்து நாள் முழுதும் மிக்ககோரமான யுத்தத்தைச்செய்து கொல்லப்பட்டுப் பிரம்மலோகத்தை அடைந்தார். வேதமானது நன்றாக அத்தியயனம் செய்யப்பட்டால் எந்தப் பலனுண்டோ அந்தப் பலன் இந்தப்

---

[1] இங்கு, 'சுத்தம்=ஒன்றிலும் கலவாதது;சபளம்=எல்லாவற்றிலும் கலந்தது; ஸூக்ஷ்மம்=ஸூக்ஷ்மமானது; விராட்=ஸ்தூலமானது என ரூபம் நான்குவிதமாதலின் ஸ்தோத்ரமும் நான்குவிதமாயிற்று' என்பது பழைய உரை.

பர்வத்தைப்படிப்பதாலுண்டாகும். இந்தப் பர்வத்தைப்படித்தலால் பயமற்றவர்களான க்ஷத்திரியர்களுக்குப் பெரிதும் சிறந்ததுமான கீர்த்தியானது உண்டாகிறது. எந்தமனிதன் இந்தப்பர்வத்தை நித்தியம் படிப்பானோ, அல்லது கேட்பானோ அவன் மஹாபாபங்களினின்றும் தன்னால் செய்யப்பட்ட கோரமான கர்மாக்களினின்றும் விடுபடுகிறான்; பிராம்மணனுக்கு யஜ்ஞஞ்செய்தால் எந்தப்பலனுண்டாமோ அந்தப்பலன்உண்டாகிறது; க்ஷத்திரியர்களுக்குக் கோரமான யுத்தங்களில் கீர்த்திஉண்டாகிறது; மற்ற இரண்டு வர்ணத்தார்களும் இஷ்டமான காமத்தையும் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் அவ்வாறே அபீஷ்டங்களையும் நித்தியமாக அடைகிறார்கள்" என்று வைசம்பாயனர் கூறினார்.

நாராயணாஸ்திரமோக்ஷபர்வம் முற்றிற்று.

துரோணபர்வம்

முற்றிற்று.

---